# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம் தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 19 திருவள்ளுவர் ஆண்டு 2052 டிசம்பர்த் திங்கள் – 2021


## உள்ளே...















# மருத்துவக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Immunotherapy | - | நோய் எதிர்ப்பு மருத்துவம் |
| Trophology | - | ஊட்டவியல் |
| Triglycerides | - | குருதிக் கொழுப்பு |
| Prognosis | - | நோய் முன்கணிப்பு |
| Nosolgy | - | நோய் வகையியல் |
| Nostrum | - | கை மருந்து |
| Meningitis | - | மூளைக் காய்ச்சல் |
| Radium therapy | - | கதிர்வீச்சு மருத்துவம் |
| Lipid | - | குருதிக்கொழுப்புத் தொகுதி |
| Lipoidosis | - | கொழுப்பு நோய் |
| Keyhole surgery | - | துளை அறுவை மருத்துவம் |
| Hydropericardium | - | நெஞ்சகநீர் |
| Human organ transplant | - | உறுப்பு மாற்று |
| Gasp | - | மூச்சுத் திணறல் |
| Gastralgia | - | இரைப்பை வலி |
| Etiology | - | நோய்க் காரணவியல் |
| Diagnosis | - | நோய் ஆய்வுறுதி |
| Dengu fever | - | முடக்குச் சுரம் |
| Beri -beri | - | நரம்பு வீக்க நோய் |
| Angioscope | - | குருதிக்குழல் நோக்கி |
| Angioplasty | - | குருதிக்குழல் சீரமைப்பு |
| Anatomic theraphy | - | தொடுமுறை மருத்துவம் |
| 0Anaphylaxis | - | கடுமொவ்வாமை |
| Ultra Violet | - | புறஊதாக் கதிர் |
| Accouchur | - | மகப்பேற்று மருத்துவர் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2052 – கார்த்திகை
டிசம்பர்த் திங்கள் 2021

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

# சொல் -தமிழரின் பண்பாடு

தமிழர் பண்பாடு பல காலமாகப் பேணப்பட்ட, திருத்தப்பட்ட, மேம்படுத்தப்பட்ட உணர்வுகளைக் கொண்டது.

அது தொடர் மாற்றத்துக்கு உட்பட்டு நிற்கும் ஒரு இயங்கியல் பண்பாடு ஆகும். பாவாணர் கூறுவது போல் பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம், நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை.

சங்கத் தமிழர்கள் உண்ணும் உணவு, உடுத்தும் உடை, உறைவிடம் எனப் புறக்கூறுகளிலும், அன்பை உணர்த்தும் அக உணர்விலும் மெச்சத் தக்க பண்பட்ட ஒரு வாழ்வியலைக் கடைப்பிடித் தனர்.

எவ்வுணர்வுகளைப் பிறர் அறியக்கூறல், எவ்வுணர்வுகளை அகம்கொண்டு கையாளுதல் என உணர்வுகளுக்குக் கூட உச்சகட்டக் கட்டமைப்பை உலகுக்கு உணர்த்தியவர்கள் நம் முன்னோர்கள். சொல்லக் கூடியதைப் பிறர் அறியச் சொல்லியும், உணரக் கூடியதை உணர்ந்தும், உணர்த்தியும் வாழ்ந்தனர். பண்பாடு ஓர் இனக் குழுவின் வரலாறு.

மொழிக்கு இலக்கணம் வகுத்த தமிழர்கள் வாழ்வியலுக்கும் இலக்கணம் வகுத்து வாழ்வை அகம், புறம் என்றனர். கலித்தொகையில் “பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்” என்றும் வள்ளுவத்தில் “பண்புடையார் பட்டுண்டு உலகம் ”என்றும் உரைப்பதை நாம் அறிய முடிகிறது.

பண்பு உடையவரைச் சான்றோரென்றும், ஒழுக்கமுடையவரென்றும், ஒளியோரென்றும், மாசற்ற காட்சியுடையோரென்றும் அழைப்பர். ஓர் இனத்தாரின் பண்பாட்டை நாம் அறிந்து கொள்வதற்குச் செம்மாந்த இலக்கண இலக்கியங்கள் துணை நிற்கின்றன. தொல்காப்பியம் இன்று கிடைக்கப்பெறும் மிக மூத்த தமிழ் இலக்கண நூலாகும். இஃது இலக்கிய வடிவில் இருக்கும் இலக்கண நூல் ஆகும்.

இவள் மேனி அணைபோலும்; இது பரிசத்தால் அறிந்தது. இவள் மேனி மாந்தளிர் போலும்; இது கண்ணாலுணர்ந்தது.. இவள் கூந்தல் பூப்போலும் நாற்றமுடையது; இது மூக்கால் உணர்ந்தது.. இவள் மொழி யாழிசை போலும்; இது செவியால் உணர்ந்தது. இவ்வாறு சொல்லால் கூறாது ஐம்புலன்களால் அறிதலும், உணர்த்தலுமே மெய்ப்பாடு ஆகும். இதையே தொல்காப்பியரும்,

> *“உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்*
> *மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடாகும்”*
> *(தொல். பொ.செய்.202)*

மணம் என்ற சொல்லுக்குக் கூடுதல், தேய்தல் என்பது பொருள்.

இதன் வேர்ச்சொல் மண் என்பதாகும். இன்று பொதுநிலையில் மணம் என்பது நறுமணத்தைக் குறிப்பினும் பழங்கால வழக்கில் இச்சொல் பல பொருள் உடையதாக இருந்தது.

மண்ணுதல் என்ற சொல்லின் பொருள் கழுவுதல், நெருங்குதல், கலத்தல், கூடுதல், அழகு பெறுதல் எனப் பலவாகும். மண் இயற்கையில் மணம் உடையது. அதனை மண் மணம் என்பர். திருமணத்தைக் குறிக்கும் மணம் தோய்தல் என்ற பொருளில் வந்தது.. திருமண நாளன்று மணமகன் மணமகள் இருவருக்கும் பால் வைத்துத் தோயவார்த்தல் என்ற முக்கிய சடங்கு கடைப்பிடிக்கப்பட்டது.

இருமனம் ஒருமனம் ஆவதுதான் திருமணம் என்பார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். திருமணம் ஒரு புதிய தலைமுறையைத் தோற்றுவிக்கிறது.

ஆணும் பெண்ணும் அன்போடு ஒன்றுபட்டுக் கூடி வாழும் வாழ்வே அக வாழ்வாகும். ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து வாழ்வதில் ஏற்படும் இன்பத்தை எவராலும் வெளிப்படையாக எடுத்துரைக்க முடியாது.

அஃது அவர்கள் உள்ளத்தால் உணரும் ஒப்பற்ற இன்பமாகும். இதைச் சொற்களால் கூற முடியாது; சொற்களுக்குள் அடங்காது. மக்களின் வாழ்வியலானது பாலியத்தாலும், வன்முறையாலும் கட்டமைக்கப்பட்டுள்ளது. ஆகவே வாழ்வில் இரு பக்கங்களாக அகமும், புறமும் அமைகின்றன.

தலைவனைப் பார்த்துத் தலைவி கூறும் கூற்றாக வரும் பாடல் ஒன்றில், இந்தப் பிறவியில் மட்டுமல்ல, இனி வரும் பிறவிகளிலும், உன் நெஞ்சினுள் நிறைந்து நிற்கும் காதலி நானாகத்தான் இருக்க வேண்டும் எனச் சுவைபடக் கூறுகிறாள்.

> **“இம்மை மாறி மறுமை யாயினும்**
> **நீயாகியர் என் கணவனை**
> **யானாகியர் நின் நெஞ்சுநேர் பவளே”**
> *(குறுந்தொகை 49)*

காதலின் அன்பின் பிணைப்பினை இதைவிடச் சிறப்பாக எப்படி உணர்த்த முடியும்?

> **“கண்ணினும் செவியினும்**
> **திண்ணிதின் உணரும் உணர்வுடை**
> **மாந்தர்க்கல்லது தெரியின் நன்னயப்**
> **பொருள்கோல் எண்ணருங் குரைத்தே”**
> *(தொல். மெய்ப். 27)*

இந்த மெய்ப்பாடுகளை எல்லோராலும் புரிந்துகொள்ள இயலாது. கண்ணாலும், செவியாலும்

தெளிவாக இதற்குப் பொருள் இதுவெனச் சரியாக உணரும் மாந்தர்க்கல்லால் இதன்பொருள் மற்றோர்க்குப் புலப்படாது என நிறைவு செய்கிறார் தொல்காப்பியர்.

**ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா**
**கற்பும் ஏரும் எழிலும் என்றா**
**சாயலும் நாணும் மடனும் என்றா**
**நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு**
**ஆவயின் வரூஉம்கிளவி எல்லாம்**
**நாட்டிய மரபின் நெஞ்சுகொளில் அல்லது**
**காட்டலாகாப் பொருள் என்ப**
*(தொல்.பொருளியல் 53)*

வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலாகிய குணங்களின் வேறாய்த் துய்த்தறியப்படும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் பொருள்களையும் மெய்ப்பாடு வாயிலாகத் தெளியப்படும் அச்சம், பெருமிதம், உவகை முதலிய பண்புகளையும், செயல் வாயிலாக அறியப்படும் அழுக்காறு, அவா, அடக்கம் முதலிய குணங்களையும் ஐம்பொறி வாயிலாக உணரப்படாமல் எஞ்ஞான்றும் உள்ளத்துணர்வான் தாமே தெரிதலன்றி ஒருவரால் புலப்படக் காட்டுதற்கு ஆகாதன என விதந்தோதினர்.

ஒப்பு முதலாக நுகர்ச்சி ஈறாகக் கூறப்பட்டன. எல்லாம் புலனெறி வழக்கின் நற்சான்றோர் நிறுவிய இலக்கணத்தான் நெஞ்சத்துத் தாமே உணர்தல் அன்றி ஒருவராற் நாட்டற்கு ஆகாதன ஆகும்.

**“நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி**
**வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை**
**இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை**
**என்றிவையின்மை என்மனார் புலவர்”**
*(தொல்.மெய்ப். 26)*

அழுக்காறு, அறனழியச் செய்யும் சூழ்ச்சி, தம்மைத் தாமே பெரியவராக நினைத்தல், புறங்கூறல், கடுஞ்சொல் கூறல், சோர்வு, முயற்சியின்மை, தன் குலத்தினானுந் தன்குடிப் பிறப்பினானுந் தம்மை மதித்து இன்புறல், பேதைமை, யாதொன்றாயினுங் கற்றதனையும் கேட்டதனையும் மறத்தல், ஒப்புமை என்பது ஆண்பாலாயினும் பெண்பாலாயினும் தன்னால் காதலிக்கப்பட்டார் போல்வாரைக் கண்டவழி அவர் போலுவர் என ஆங்கு நிகழும் உள்ள நிகழ்ச்சி. அது உலகின்கட் கீழ்மக்கள் மாட்டும் கண்ணிலோர் மாட்டும் நிகழ்தலின் அது தலைமக்கட்காகாதென விலக்கப்பட்டது.

பசி, தாகம், பாலுணர்வு, உறங்குதல், விழித்தல் என இவையெல்லாம் பொதுவான அகத்தெழுச்சி உணர்வுகளாகவும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என இவையெல்லாம் புறஎழுச்சி உணர்வுகளாகவும் தொல்காப்பியர் கூறுகிறார்.

இரண்டாயிரம் ஆண்டுகளைக் கடந்தும் நம் பண்பாட்டின் ஆணிவேர் இப்புவியில் வேர் ஊன்றி உலகை நல்வழிப்படுத்தக் காரணம் நம் சங்கச் சான்றோர்கள் உணர்வுகளைத் திறம்படக் கையாண்டமையே ஆகும்.

எங்கு எப்போது உணர்வுகளை வெளிப்படுத்த வேண்டும். எங்கு எப்போது உணர்வுகளை அடக்கியாள வேண்டும் என்பதில் ஒரு சீர்மைமிகு கட்டமைப்பைக் கையாண்டனர்.

இன்றைய இளம் தலைமுறையின் மிகப்பெரிய சவால் உணர்வுகளை அதன் போக்கில் விடுதல். வழிப்பயணத்தையே சீராகத் திட்டமிடும் நாம் வாழ்க்கை பயணத்தைச் சீராகத் திட்டமிட வேண்டாமா! முன்னோர் தம் வாழ் நெறியைக் கடைப்பிடித்துப் பண்பட்ட மனிதராய் வாழ்வோம்!

தமக்கான பொருள்களோடு தமிழினத்தின் பண்பாட்டையும் வரலாற்றையும் உள்ளூடாகக் கொண்டு விளங்கும் தமிழ்மொழியின் சொல்வளத்தைக் காத்தல், காலத்திற்கேற்ற கலைச்சொற்களைச் சேர்த்தல் ஆகிய மொழிக்காப்புப் பணிகளை இவ்வியக்ககம் செய்துவருகிறது.

இப்பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்வதில் மகிழ்கிறேன்.

அகரமுதலி இயக்ககம் சார்பில் 08.11.2021 ஆம் நாள் நடைபெற்ற தமிழ் அகராதியியல் நாள்விழா 2021இன்போது 2020ஆம் ஆண்டுக்கான “தூயதமிழ் ஊடக விருது“, “நற்றமிழ்ப் பாவலர் விருது“, “தூயதமிழ்ப் பற்றாளர் விருது“, 2020, 2021 ஆம் ஆண்டுகளுக்குரிய “தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு“, பள்ளி மாணவர்களுக்கு மாநில அளவில் நடைபெற்ற 2020, 2021 ஆம் ஆண்டுகளுக்குரிய ஓவியம் மற்றும் கலைச்சொல்லாக்கப் போட்டிகளுக்கான பரிசு ஆகியவற்றைப் பெற்ற தமிழன்பர்களுக்கும், மாணவச் செல்வங்களுக்கும் மகிழ்ச்சியையும் பாராட்டையும் தெரிவிப்பதில் பெருமையடைகிறேன்.

இம்மாதச் “சொல்வயல்“ இதழுக்குத் தமிழறிஞர்கள் திருமிகு சா.கிருட்டினமூர்த்தி ஐயா, திருமிகு அமுதன் ஐயா ஆகியோரின் கட்டுரைகள் அணிசேர்த்துள்ளன. அப்பெருந்தகைகளுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இலங்கையில் தமிழ் நோக்குநூல்களின் வளர்ச்சிப் போக்குகள் குறித்து சிறந்த ஆய்வுக்கட்டுரையை வழங்கியுள்ள ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் ஐயா அவர்களுக்கும், “சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே“ என்ற பொருண்மையில் சிறந்ததொரு கட்டுரையை வழங்கி அணிசேர்த்திருக்கின்ற என் அன்பிற்கினிய இளவலும், மொழிபெயர்ப்புத்துறை இயக்குநருமாகிய முனைவர் ந.அருள் அவர்களுக்கும், இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்கு கிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்.செயலால் பேசுவோம்.

# இலங்கையில், தமிழ் நோக்கு நூல்களின் வளர்ச்சிப்போக்குகள்

## ஓர் உசாவல் நோக்கு



**முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனம், பாரிசு.

### *தமிழர்கள் தமிழெனும் ஒரேமொழியால் பிரிக்கப்பட்டிருக்கின்றனர்.*

*தமிழ் இந்தியாவில் பிறந்தது தமிழ் இலங்கையில் பண்டுதொட்டு வழங்கப்படுகின்றது. மலேசியா,சிங்கப்பூர் ஆகிய நாடுகளிலும் தமிழ் ஒருமொழியாக விளங்குகின்றது.*

*மேற்கண்டநாடுகளில் நிலவும் தமிழ், பொது மொழியாக இருந்தாலும்,அந்நிலங்களில் பேசப்பெறும்,எழுதப்பெறும் முறைமை காரணமாக ஒரேமொழியால் பிரிக்கப்பட்டு,அம்மண்களின் பெயரால்அழைக்கப்படுகின்றது.*

*இலங்கையில் இற்றைக்கு 2000 ஆண்டுகளுக்கு முன்பு தமிழர் வாழ்ந்தனர்.தமிழ்வழங்கும் எல்லை பற்றி குறிப்பிடும் தொல்காப்பியப் பனம்பாரனார் பாயிரம்,“வடவேங்கடம் தென்குமரிஆயிடைத் தமிழ்கூறுநல்லுலகம்” எனும் பண்டையகூற்றுத் தோற்றம் பெறுவதற்கு முன்பாகவே அந்த எல்லைக்கு அப்பாற்பட்டதான இலங்கையில் தமிழ்ச்சமுகம் நிலை ஊன்றிவிட்டது.*

*தமிழகத் தமிழர்களுக்கும் ஈழத்தமிழருக்கும் இடையிலான உறவு அறுந்திருந்தகாலம் இறந்தகாலம். முற்காலத்தை விட இக்காலத்தில் இருதமிழ் பேசும் உடன்பிறப்பாளர்களும் நெருங்கிப் பழகும் நல்லசூழ்நிலை, புரிந்துணரும் தொப்புள்கொடி உறவு உருவாகியிருக்கிறது.*

*இந்தநிகழ்காலத் தொடர்பானது,ஈழத்தமிழ் காலவோட்டத்தில் தமிழ்நாட்டுத்தமிழிலிருந்து வேறுபட்டுக் கூறாகிவிடுமோ என்றிருந்த அச்சத்தினை விரட்டித் துரத்திவிட்டது.“*

*57 நாடுகளில் தமிழ் இன்றுபேசப்படுகிறது எனில் அதற்கு நாம் இலங்கைத் தமிழர்களைத்தாம் வேண்டும்.”எனதமிழாற்றுப்படை முன்னுரையில் (2019) கவிப்பேரரசு வைரமுத்து எழுதியது தற்காலம்.*

### நோக்கு நூல்கள் - Reference Books

*தமிழ் அகராதியின் பிறப்பு, முதன்நூலான தொல்காப்பியத்தில் முளைவிட்டுத் தொடங்கி, சொல்லுக்குப் பொருள்கூறுவதை நோக்கமாகக் கொண்ட நிகண்டுகளில் காயாகி,அகராதிகளில் கனியாகி, தமிழ் அகராதியியல் வளர்ச்சி கண்டிருக்கின்றது. நோக்குநூல்கள்என்பன ஒருமொழியை அல்லது பலமொழிகளை ஆழமாகக் கற்பதற்குக் கருவி நூல்களாகக் கையாளப்படுகின்றன.*

*இலங்கையிலும் கற்றல்கூறும்,பொதுஅறிவும் உடைய நோக்குநூல்கள் தொகுக்கப்பட்டுவந்தன; வருகின்றன. காலந்தோறும் தோன்றும் மொழியின் வளர்ச்சியில், அதன் இயல்புக்கேற்பச் சொற்கள் புதிதுபுதிதாய்த் தோன்றிக்கொண்டே இருக்கும். பலசொற்கள் பயன்பாடு குன்றிவழக்கொழிந்து அருகத்தொடங்கும். இவற்றைத் தொகுத்துப் பார்க்கும் சூழல் வரும்போதுதான் நோக்கு நூல்களின் இன்றியமையாமையை அறிந்துகொள்ள முடியும்!*

**இலங்கையில் தொகுக்கப்பட்ட முதன் நோக்குநூல்கள்** :

| நோக்குநூல்கள் | நிகண்டுகள் | அகராதிகள் | சொற்பிறப்பாராய்ச்சி | அறிவுக்களஞ்சியம் |
|---|---|---|---|---|
| | சிந்தாமணி நிகண்டு – வைத்திலிங் கம்பிள்ளை -1849 | கையகராதி –A manual diction – ary of the Tamil Language - 1842 | சொற்பிறப்பு – ஒப்பியல் தமிழ் அகராதி– S. Gnana Prakasar 1938 – 1947 | அபிதான கோசம் -ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை - 1902 |

*மொழியில் ஐயம்கிட்டும் இடத்தும், விளக்கம்நாடும் பாடத்தும்,ஆய்வியல் தடத்துக்கும்நோக்கத்தக்கனவாக உள்ளவை நோக்கு நூல்கள். அவை பலம்கொள்ளப்படும் நிலையைப்பொறுத்து அமைப்பு முறையில் ஏழெட்டு*

வகைகளாக உள்ளன. அவற்றில்,

1). நிகண்டு – Nikandu,
2) அகராதி – Dictionary,
3). கலைக்களஞ்சியம் – Encyclopedia
4). சொற்பிறப்பு – Etymologia.
5). சொற்பட்டியல் – Glossary



Rev. M.Winslow A. Muththuthampipillai Rev. Gnana Prkasar Rev. P.Percival

ஆகியன இக்காலத்தில் நோக்குநூல்களில் சுட்டிக்கூறத்தக்கனவாக விளங்குகின்றன.

இவற்றிற்கிடையே பொதுநிலையில் சில ஒற்றுமைகளும், பலவேற்றுமைகளும் காணப்படுகின்றன. இவ்வகை நூல்களில் அகராதிகளே கூடுதல் பயன்தருவன. அகராதிக்கலை வளர்ச்சியிலும்இலங்கைத்தமிழரின் பங்களிப்பு ஒரு நூற்றாண்டுகால வரலாறு உடையது.

இலங்கையில் உண்டான சொற்பொருள் தரும் நோக்குநூல்களின் வளர்ச்சிப்போக்குகள்எவ்வாறு தமிழ் மொழிக்கு உரம்கொண்டு வளம்கண்டன என்பதனை இக்கட்டுரை நீண்டஉசாவல்செய்கின்றது(1). இந்நோக்குநூல்கள் பற்றிய முற்றிய தரவுகள் முனைப்புடன் திரட்டப்படாதததனால், தமிழ் வழங்கும் உலகம், பதிவு செய்யத் தவறிய ஈழத்துப் படைப்புக்களின் வரலாறுகளும் உலவியது உண்டு!. அக்குறைபாடுகள் வெளிச்சத்திற்கு வருதற்குக் காலத்தின் கோலத்து உலாவல்கள் இங்கு விசாலிக்கப்படுகின்றன(2).

## 1. நிகண்டு – Nikandu

தமிழ்மொழியில் சொற்களுக்குப் பொருள்கூறும் பணி தொல்காப்பியத்திலே முளைவிட்டது. தமிழ்மொழியின் முதற் சொற்களஞ்சியங்களான நிகண்டுகள் சொற்களுக்குப் பொருள்கூறுவதையே நோக்கமாகக் கொண்டு தோற்றம்பெற்றவை.அவ்வகையில் முன்னையோர் அரிதின்முயன்று தொகுத்த நூல்களே நிகண்டுகள். இவற்றின் 12 வகையான பொருட்புல அமைப்புக்குத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் கருப்பொருளை விளக்குகின்ற நூற்பாவேஅடித்தளம்.

தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப (தொல்)

12 வகையான பொருட்புலங்களை 03 பெரும்பிரிவுகளில் உள்ளடக்கலாம்.

1. ஒரு பொருட் பல்பெயர்த் தொகுதி
2. ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதி
3. பல்பொருள் கூட்டத்து ஓர பெயர்த்தொகுதி

### சிந்தாமணி நிகண்டு

யாழ்ப்பாணம் வல்லையைச் சேர்ந்த வைத்திலிங்கம்பிள்ளை1874இல் சிந்தாமணி நிகண்டை இயற்றினார். பதினோராம் தொகுதியாக அமைந்த நிகண்டில் ஒருபொருளுடைய சொற்கள் எதுகையாக உள்ளன. இதில் 400 விருத்தங்களுடன்,3000 சொற்களுக்குப் பொருள்கள் உண்டு.

### நீரரர் நிகண்டு

நீரரர்நிகண்டு 1941இல், ஈழத்துப் பூராடனாரால் தொகுக்கப்பட்டது. மட்டக்களப்பு வயற்செய்கையைப் பொருளாகக் கொண்ட இந்நிகண்டு, உயர்திணைபெயர்மஞ்சரி,அஃறிணைப்பெயர்மஞ்சரி,தொழிற் பெயர்மஞ்சரி,இடப்பெயர்மஞ்சரி,கலாச்சாரச்செயல்மஞ்சரிஎன5மஞ்சரிகளை உடையது. நிகண்டுச் சொற்பொருட் கோவை(1982),தமிழ் நிகண்டுகள் ஆய்வு(2002), தமிழ் நிகண்டுகள் வரலாற்றுப்பார்வை(2005),தமிழ் நிகண்டுகள் உள்ளடக்கமும் வரலாறும்(2010) முதலான நிகண்டு நூல்களில் நீரரர் நிகண்டு பற்றிய குறிப்புக் காணப்படவில்லை. இதுதவிர, சரஸ்வதிநிகண்டு: சமற்கிருதம் சிங்களம்–தமிழ், சித்தானசதா நிகண்டு: சமற்கிருதம்–சிங்களம்–தமிழ்,வனராசா நிகண்டு: சமற்கிருதம்–சிங்களம்– பாளி –தமிழ் ஆகிய பன்மொழி நிகண்டுகளும்தொகுக்கப்பட்டிருந்தன. A History of Tamil Dictionaries.

## 2. அகராதி – Dictionary

கிறித்தவ மதப்பிரிவுகளைப் பரப்பும் நோக்கத்தில் ஐரோப்பியரும் அமெரிக்கரும் இலங்கைக்கு வந்திறங்கினர்.அவ்வாறு வந்த ஐரோப்பிய மதகுருமார்களில், இந்தியாவிலும் இலங்கையிலும் முதலில் இடம்பிடித்தவர்கள் போர்த்துக்கேயர்களே. அதேபோல் முதலில் தமிழ்கற்றுஅகராதியியலாளராகி,1655–58 காலப்பகுதியில் Vocabularium Tamulicum (Jaffna)எனும்அகராதியைத் தொகுத்தவர் ஹென்றிக். ஹென்றிக்கஸ் என முதல் தமிழ் – போர்த்துக்கேயம் இருமொழி அகராதியான Vocabvlario Tamalico Com a Significam Portvgveraஐத் தொகுத்த அந்தேஓம் ப்றொஎன்சா Anteo de Proença தனது முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறார். இலங்கையில் திரட்டப்பட்ட தமிழ்ச் சொற்களும் இந்தியாவில் வெளியான இம்முதலகராதியில்சேர்க்கப்பட்டன.









யாழ்ப்பாணத்தில் முதல் தமிழ் தமிழ் அகராதி, ஆங்கிலம் தமிழ் அகராதி தொகுப்புமுயற்சிகளுக்கு முதல்வராகச் செயலாற்றியவர் வண. யோசெப் நைட்- Joseph Knight.. இவர்மரித்த பின்,அமெரிக்க மிஷனறியின் மதகுருமார்களான லெவி ஸ்போல்டிங் Levi Spaulding,மைரன் வின்ஸ்லோ Miron Winslow ஹடுட்சின்ஸ் Hutchings ஈழத்து தமிழறிஞர்களானசந்திரசேகர பண்டிதர்(உடுவில்),சேனாதிராயமுதலியார்(இருபாலை),கபிரியெல் திரேசர்(கொழும்பு),

எவாட்ஸ் கனகசபாபிள்ளை(அளவெட்டி), மயில்வாகனன் (உடுவில்),வயிரமுத்துபிள்ளை(நவாலி),ஆங்கிலேயரான பீட்டர் பெர்சிவெல் Peter Percivel ஆகியோர் ஒன்றுசேர்ந்து தொகுத்த தமிழ் ஒரு மொழி அகராதி, பெயரகராதி – Manual Dictionary of the Tamil Language எனப்பெயரிடப்பட்டது.

இது கையகராதி,மானிப்பாய் அகராதி,யாழ்ப்பாண அகராதி,விரிவகராதி எனப்பல்வேறுபெயர்களால் நூல்களில் குறிப்பிடப்படுகின்றது. ஆயினும் Manual Dictionary என அட்டையில்உள்ளதனால் கையகராதி எனவும், மானிப்பாய் அமெரிக்கன் மிஷனறி அச்சகத்தில்பதிப்பிக்கப்பட்டதனால் மானிப்பாய் அகராதி எனவும், பின்னாளில் யாழ்ப்பாண அகராதி எனவும்அழைக்கப்பட்டது.1842ஆம் ஆண்டுவெளியான இலங்கையின் முதலகராதியான இதில் 58.500 சொற்கள்இருந்தன.இது சதுரகராதியிலும் பார்க்க நான்கு மடங்கு சொற்களைக் கொண்டது. முன்னட்டை: அமெரிக்கஆங்கில அகராதியியல் பண்பாடு. உள்ளட்டை: தமிழ்ப்பண்பாடு பெயரகராதியின்அட்டையில் கடவுள் வணக்கம் என உள்ளது.இதன் கீழே சாலிவாகன சகார்த்தம்,கிருஸ்துவருஷம், பிலபவ வருஷம் எனும் குறிப்புகள் தமிழ், கிறித்தவப் பண்பாட்டைஎடுத்தியம்புகின்றன. இது பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி என மூன்று பகுதிகளைஉடையது. இவ்வகராதி புதிதாக யாழ்ப்பாண அகராதி எனும் பெயரில் 2005 இல், கொழும்பில் சேமமடு பதிப்பகத்திலும்,சென்னையில் தமிழ்மண் பதிப்பகத்தில் வெளியிடப்பட்டது.










யாழ்ப்பாணத்து மிஷனறிமார் இரண்டாவதுஅகராதியாக English – Tamil Dictionary :ஆங்கிலம்– தமிழ் அகராதியை மைரன் வின்ஸ்லோ 1844 இல் மானிப்பாய் அமெரிக்கன் அச்சகத்தில் பதிப்பித்தார். இந்தஅகராதியின் சிறப்புஎன்னவென்றால், 1828 இல், அமெரிக்க ஆங்கில அகராதியியலின் தந்தையாகவிளங்கும் Noah Webster தொகுத்த ஆங்கிலம் –ஆங்கிலம் அகராதியிலுள்ள முக்கியமான அமெரிக்க ஆங்கிலச்சொற்களை மூலமொழியாகவும், தமிழைஇலக்குமொழியாகவும் அமைத்தது! அமெரிக்க மிஷனறிமார் கல்விப் பெருக்கத்திலும் விஞ்ஞான வளர்ச்சியிலும் மேம்பட்டிருந்த ஓர் சமூகத்திலிருந்து வந்தமையால் புத்தகுலகில்ஏற்பட்டிருந்த புதுமைகளெல்லாம் யாழ்ப்பாணச் சமூகத்தினருக்கு வழங்கிமுன்னேற்றம் ஏற்படுத்தினர். இவ்வகராதியில் ஆங்கிலச்சொற்கள் ஒவ்வொன்றிற்கும் ஒத்தகருத்துடைய தமிழ்ச்சொற்களினால் வரைவிலக்கணம் தரப்பட்டிருந்தது. ஆங்கிலச்சொற்களை விளங்கப்பயன்படுத்தப்பட்ட சொற்கள் சிறந்த பழந்தமிழ்ச்சொற்களாகத் திரட்டப்பட்டிருந்தன. இவ்வகராதி 1852ஆம்ஆண்டு,இரண்டாம் பதிப்பாக வெளிவந்தபோது இருந்த ஆங்கிலச்சொற்களின் எண்ணிக்கை36.737. முதலாம் பதிப்பு இதைவிட 8.984 சொற்களைக் குறைவாகக் கொண்டிருந்தது. 1888இல் செனையிலிருந்த ஹிக்கின்போதம் பதிப்பகத்தினால் இதன் மூன்றாவது பதிப்புவெளியிடப்பட்டது.

தொடரும்...

# “ சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே ”

முனைவர் ந.அருள்,
இயக்குநர் (மொழிபெயர்ப்பு), தலைமைச் செயலகம்



நம் தாய்மொழியாகிய தமிழ்மொழி இன்று செம்மொழியாக உயர்ந்து சிறந்து பொலிவதற்கு அதன் தொன்மைத் தன்மையும் முதன்மையான காரண மாகும். ஒரு மொழியின் தொன்மையைப் போல அதன் இளமையும் எளிமையும் பெருமைக்குரிய ஒன்றாகும்.

இங்கு, இளமை என்பது, இன்றைய சூழலுக்கும் அம்மொழிக்கும் இடையேயான உயிரோட்டம் நிறைந்த உறவையே குறிக்கிறது. இதன் அடிப்படையில், தொன்மை, இனிமை, வளமை, செம்மை, வியன்மை போன்ற எண்ணற்ற சிறப்புகளை ஒருங்கேயுடைய தமிழ்மொழியை என்றும் குன்றாத இளமை மொழியாகவும் மிளிரச் செய்வதற்கு, சொல்லாக்கம் மிகவும் இன்றியமையாததாகிறது.

தமிழில் எழுத்துகளின் வகைகள், குறில்,நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற பாகுபாடு யாவுமே திட்டமிட்டு மரபாக்கப்பட்டன. குற்றியலுகரம், குற்றியலிகரம் என்பவை தமிழுக்கு உரிய மரபு தான். நாய்க்குட்டி, கோழிக்குஞ்சி என்று இன்றும் கூறுவதற்கு மரபே அடிப்படையாகும்.

ஆண் யானையைக் களிறு என்றும், பெண் யானையைப் பிடி என்றும் கூறினர். மேற்புறத்தில் வலிமை உடைய மூங்கிலைப் புல்லினம் என்றனர். உட்பகுதியில் வைரம் கொண்டதை மரம் என்றனர். தாழை மடல், தென்னை ஓலை, வாழை இலை என்று கூறியதற்கும் மரபே அடிப்படையாகும். கண்ணி, தெரியல், தொங்கல், தொடை, கோதை என்று காரணத்தின் அடிப்படையிலான மாலையைப் பற்றிய சொற்கள் பிறகு மரபாக அமைந்தன.

ஆட்சி மொழியாகவும், பயிற்று மொழியாகவும் வளர்ச்சியடைந்துள்ள மொழியை அறிவியல் மொழியாகவும், நாளும் மாறிவரும் புதிய உலகிற்கான வளமொழியாகவும் வன்மை பெறச் செய்வதற்குச் செழுமையான சொற்களஞ்சியம் அம்மொழியில் இருத்தல் வேண்டும். பண்டைய காலத்திலிருந்தே, செழுமையான சொற்களைத் தமிழர்கள் உருவாக்கினர்.

**“பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லி னாகும் என்மனார் புலவர்”**

(தொல். பெய.2)

எனச் சொல்லின் பொருட்தன்மையைத் தொல்காப்பியர் விளக்கினார். பொருண்மையும் சொன்மையும் தெரிதலோடு, ஒவ்வொரு சூழலுக்கும், பண்புக்கும், இடத்திற்கும், பயன்படும் முறைக்கும் ஏற்றவாறும் அக்காலத் தமிழர்கள் சொல்லாக்கம் செய்துள்ளனர்.

எடுத்துக்காட்டாகச் சோற்றை “அவிழ்பதம்” எனக் குறித்தனர். அவிழ்தல் என்பதற்கு, மலர்தல், விரிதல் எனப் பல பொருளுண்டு. சோறு, அரிசி எனும் நிலையிலிருந்து மாறி, நீரில் பதமாக வெந்து மலர்வதை அவிழ்பதம் என அழகாகச் சொல்லாக்கம் செய்துள்ளனர். தமிழர்களின் சொல்லாக்கத் திறனுக்கு இதுபோன்ற எண்ணற்ற எடுத்துக்காட்டுகளை முன்வைக்கலாம்.

ஆனால், தொழில்நுட்ப வளர்ச்சியும் அறிவியல் புனைவுகளும் மிகுந்து காணப்படுகிற இன்றைய சூழலில் அழகிய தமிழ்ச்சொற்களை நாம் மேலும் உருவாக்க இயலுமா? அவ்வாறு உருவாக்கினாலும், அவற்றைப் பயன்பாட்டிற்குக் கொண்டு வர ஏலுமா? ஆங்கிலத்தில் ஒரு புதிய சொல் ஓரிரு வாரங்களில் வழக்கத்தில் வந்துவிடுகிறது. செய்தி ஊடகங்களும் சமூகத் தொடர்பியங்களும் அவற்றைப் பயன்பாட்டிற்குக் கொண்டு வந்துவிடுகின்றன,

ஆனால் தமிழ்ச்சொற்கள் வழக்கத்திற்கு வர ஆண்டுள் பல காத்திருக்க வேண்டியுள்ளது. சில சொற்கள் “அகராதி” அளவிலேயே நின்று விடுகின்றன. மின்சாரம் என்ற சொல் நடைமுறைக்கு வரவே 24 ஆண்டுக் காலம் கழிந்ததாகக் கூறப்படுகிறது.

'கண்டேன் கற்பினுக்கணியினை' என்று தன் சொல்லால் சீதையின் பெருமையை உணரச் செய்த அனுமனைச் “சொல்லின் செல்வன்” என்று கம்பர் அழைத்தார். மொழியியலின் பிற பிரிவுகளைக் காட்டிலும் இலக்கணத்துடன் நெருங்கிய தொடர்புடையது சொல்லாக்கம். பயிருடன் சேர்ந்து வளரும் களையை நீக்கப் பயன்படும் கருவிக்குக் களைக்கொத்தி என்று பெயர். பேசும் வழக்கில் களை என்ற சொல்லில் இருக்கும் 'ஐ' எனும் உயிர் ஒலியும் கொத்தி எனும் சொல்லில் இருக்கும் 'ஒ' எனும் உயிர் ஒலியும் மயங்கிக் களாத்தி என்ற புதிய சொல் உருவாகியது.

புதிதாக உருவாக்கப்படும் சொல்லானது, பொருள் மாறாமலும், சுருக்கமாகவும், இலக்கண மரபு பிறழாமலும் இருக்க வேண்டும். ஆனால், அண்மைக் காலமாகச் சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ள சில சொற்கள் இலக்கண மரபை மீறியுள்ளதாகவே தெரிகிறது. எடுத்துக்காட்டாக, “Eraser” எனும் ஆங்கிலச் சொல்லுக்கு “அழிப்பான்” எனும் தமிழ்ச்சொல் தற்போது வழக்கத்தில் உள்ளது. ஆனால், அஃறிணைப் பொருளுக்கு ‘அன்’ விகுதி சூட்டப்படலாமா? புரிந்துகொள்வதற்கு எளிதாக இருக்கும் காரணத்தால், இச்சொல் விரைவாக வழக்கத்தில் வந்துவிட்டது. ‘Bicycle’ எனும் சொல்லுக்கு “ஈருருளி” என்று அழகாகச் சொல்லாக்கம் செய்யப்பட்டிருப்பினும், “மிதிவண்டி ” என்ற சொல்லே வென்றது. பிரேசில் நாட்டில் விளைந்த காப்பிக்கொட்டை ஆடு, மாடு, மான் போன்ற விலங்குகளின் குளம்பு போலிருந்த காரணத்தால், பேரறிஞர் தேவநேயப் பாவாணர் காப்பியைக் “குளம்பி” எனும் சொல்லால் குறித்தார். ஆனால், ஆண்டுகள் பல கடந்தும் அச்சொல் இன்றளவும் பலரைச் சென்றடையாதது வருத்தத்திற்குரியதே. நாளும் புதிய கண்டுபிடிப்புகள் வந்து கொண்டிக்கும் இக்காலத்தில், அவற்றோடு தொடர்புடைய புதிய சொற்களை உருவாக்குவது மொழியின் வளர்ச்சிக்கான இன்றியமையாப் பணியாகும். அதே வேளையில், நம் முன்னோர்கள் உருவாக்கிய அழகிய தமிழ்ச்சொற்களை இன்றைய தலைமுறையினரிடம் கொண்டுசெல்வதும் நம் பெருங்கடமையாகும் .

ஒரு மொழியை உயிர்ப்புடன் வைத்திருப்பதற்கு, அம்மொழியில், தொடர்ந்து புதிய சொற்கள் அவ்வப்போது உருவாக்கப்பட வேண்டும். ஆனால், அத்தகைய சொற்களை உருவாக்கும் பணியில், மூத்த தமிழறிஞர்களோடு இன்றைய தலைமுறையினரும் ஆர்வத்துடன் பங்கேற்று இலக்கண நெறி மாறாமலும், தமிழின் சுவையும் பொருளும் குன்றாமலும் நாளும் புதிய கலைச்சொற்களைச் செம்மொழியாம் தமிழ்மொழிக்குச் சேர்க்க வேண்டும் என்பதே என் விருப்பம். மொழியின் வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கும் சொல்லாக்கப் பணியைத் தொழுது மேற்கொள்வோம், தமிழின் சிறப்பைப் பாரெங்கும் பறைசாற்றுவோம்.

# தமிழ் இலக்கியங்களில் கலைச்சொற்கள்

சா. கிருட்டினமூர்த்தி, தமிழறிஞர்

தமிழ் இலக்கிய வளம் செறிந்த மொழி; இந்திய மொழிகளுள் சமஸ்கிருதத்தைப் போலத் தனித்தன்மை வாய்ந்ததாகவும் தொன்மையுடையதாகவும் விளங்கும் மொழி (Sunith Kumar, *1945:8*). இம் மொழியிலுள்ள பரந்துபட்ட இலக்கியங்களில் வாழ்வியல் மற்றும் அறிவியல் செய்திகள் பொதிந்து கிடக்கின்றன. இச்செய்திகளும் அவற்றின் கலைச்சொற்களும் அவ்வக்காலச் சமுதாய மேம்பாட்டை விளக்குவனவாகவிருந்தாலும் இன்றைய மொழிப் பயன்பாட்டிற்கு அவற்றை எந்த அளவிற்குப் பயன்கொள்ள முடியும் என்பது கேள்விக்குறியாகவே உள்ளது.

எனவே தமிழிலக்கியங்கள் சிலவற்றுள் காணப்படும் சொற்களை எடுத்துக்கொண்டு அவற்றின் சிறப்பையும் இன்றைய நிலையில் அவற்றின் பயன்பாட்டையும் இக்கட்டுரை எடுத்துக்கூற முற்படுகின்றது.

## மொழி வளர்ச்சி

இன்றைய அறிவியல் தொழிலியல் வளர்ச்சிகள் மொழிநிலையில் பெரும்பாதிப்பை ஏற்படுத்தியுள்ளன. சமுதாய வளர்ச்சியைப் பாதிக்கும் காரணிகளுள் அறிவியல் கண்டுபிடிப்புகளும் ஒன்று என்பர் (குழந்தைசாமி *1973: 39*). சமுதாய வளர்ச்சியில் பாதிப்பு ஏற்படும்பொழுது மொழியும் பாதிப்பிற்குள்ளாகும் என்பது வெளிப்படை. மொழியைப் பொறுத்தவரை இப்பாதிப்பு என்பது வளர்ச்சி குறித்த ஒன்றாகவே கருதப்படும்.

தாய்மொழிவழி அறிவியல் தொழிலியல் கருத்துகளை அளிக்கமுடியும் என்றநிலை உருவாகும் போதுதான் அவ்வளர்ச்சி முழுமை பெற்றதாக அமையும். மொழியினுடைய வளர்ச்சியென்பதும் வளர்ச்சியின்மை என்பதும் நாம் கண்கூடாகக் கண்டு ஆயக்கூடியவையாகும். பயன்பாட்டு நிலையில் மொழி என்றும் நிலைத்த நிலைப்பாக இருப்பதில்லை; அதனுடைய பயன்பாடு பரவலாக்கப்பட வேண்டும்; அவ்வாறு பரவலாக்கப்படுவதற்கேற்ற மொழியாக அந்த மொழி அமையவேண்டும்.

அப்படியில்லையென்றால் அந்த மொழி ஒரு செயலற்ற மொழியாகவே கருதப்படும் (Aquiel, 1984 : 17). எனவே, மொழிப்பயன்பாட்டைப் பெருக்கவேண்டும். அறிவியல் மொழியாக, பயிற்றுமொழியாக, ஆட்சிமொழியாக, அலுவலக மொழியாக மொழிப்பயன்பாடு பெருக்கப்படும்பொழுதுதான் மொழி வளர்ச்சியடைகிறது (Mario Pei *1956: 190*).

## கலைச்சொல் கோட்பாடு

இப்பயன்பாட்டுப் பெருக்கத்திற்குப் பல கூறுகள் தேவைப்படும் என்றாலும் கலைச்சொற்கள் அவற்றுள் முதலிடம் பெறுகின்றன என்று கூறலாம். பயிற்று மொழியாகத் தமிழை அனைத்துக் கல்விநிலைகளிலும் கொண்டு வருவதற்குத் தடையாக இருப்பவை கலைச்சொற்களே என்று இப்பொழுது பேசப்பட்டு வருகின்றது. கலைச்சொற்களை உருவாக்கும் பணியில் தனிநபர்களும், தனியார் நிறுவனங்களும், கல்வி நிறுவனங்களும், அரசு அமைப்புகளும் பெரிதும் முயன்று கொண்டுதானிருக்கின்றன. பலவகைக் கலைச் சொல்லாக்கக் கோட்பாடுகளை வகுத்துத் தந்துள்ளதோடு கலைச்சொல் அகராதிகள் பலவும் வெளியிடப்பட்டுள்ளன. இவ்வாறு உருவாக்கப்பட்டுள்ள கலைச்சொல் கோட்பாடுகளுள்,

1. **பழந்தமிழ் இலக்கியங்களில் நிலவும் சொற்களைத் தேவைக்கேற்ப எடுத்தாளுதல்**
2. **பிறமொழிச் சொற்களைக் கடன்பெறுதல்**
3. **புதிய சொற்களைப் படைத்துக் கொள்ளுதல்**
4. **நடைமுறைச் சொற்களை அப்படியே ஏற்றுக்கொள்ளுதல்**
5. **நாட்டுப்புற வழக்குச் சொற்களை நிலையறிந்து ஏற்றுக்கொள்ளுதல்**

முதலிய பலவற்றுள் இலக்கியச் சொற்களைத் தேவைக்கேற்ப எடுத்தாளுதல் என்பது அறிஞர் பலராலும் இன்று வலியுறுத்தப்பட்டுவரும் செய்தியாகும்.

## தமிழில் கலைச்சொல் இல்லையா?

தமிழில் கலைச்சொல்லே இல்லை என்று கருதிக் கூறுவாரின் கூற்றை முன்னோர் பலரும் வன்மையாக மறுத்திருக்கின்றனர். தமிழில் கலைச்சொற்கள் இல்லை என்பாரைப் பழித்துக் கூறி, நிரம்பிய கலைச்சொற்கள் இருக்கின்றன என்ற உண்மையைப் பாரதிதாசன் சுட்டிக் காட்டியுள்ளார் (பாரதிதாசன் *1984 : 289 293*), "கலைச்சொல்லாக்கத்தார் புதுப்புதுச்சொற்களை மனம்போனபோக்கில் ஆக்கிக் கொள்வதைவிட இயன்ற அளவிற்குப் பழந்தமிழ் இலக்கியத்தில் உள்ள சொற்களைப் பயன்படுத்த முனைதல் நன்று. எண்ணிறந்த எழில் மிக்க வண்ணத் தமிழ்ச் சொற்கள் பழந்தமிழ் இலக்கியத்தில் கேட்பாரற்றுக் கிடக்கின்றன. அவற்றுள் பல கலைச் சொல்லாக்கத்தார்க்குப் பயன்படுவன" (திருஅடிகள் *1960*) என்ற கருத்தும் நோக்கத்தக்கதாகும். இன்றைய பலதரப்பட்ட அறிவியல் மற்றும் தொழிலியல் செய்திகளை உணர்த்தத் தேவையான அனைத்துக் கலைச்சொற்களும் இலக்கியங்களில் உள்ளன என்று கூறுதற்கில்லை; அவ்வாறு எதிர்பார்ப்பதும் பேதைமையாகும். இலக்கியங்களில் நிலவும் ஏற்புடைய கலைச்சொல்லை எடுத்தாளுதல் என்னும் நிலையில் சில கலைச்சொற்கள் காணப்படுகின்றன. இதுமட்டுமன்றித் தமிழிலக்கியங்களில் காணப்படும் கலைச்சொற்கள் ஆக்கப்பட்டுள்ள இலக்கணக்கூறுகளை இன்றைய கலைச் சொல்லாக்கக் கோட்பாட்டிற்குப் பயன்கொள்ளவும்

முடியும். இதற்குத் தமிழ் இலக்கண நூல்களும் பெரிதும் துணைநிற்கும்.

## தமிழில் கலைச்சொற்கள்

இலக்கிய, பண்பாட்டு வளம் செறிந்த தமிழில் காணக்கிடைக்கும் கலைச்சொற்கள் அனைத்தையும் முதற்கண் தேடித் தொகுக்கவேண்டும். இலக்கியங்கள், இலக்கணங்கள், உரைகள், கல்வெட்டுகள், நாட்டுப்புற வழக்குகள், வினைஞர்கள் முதலிய பல நிலைகளிலிருந்தும் சொற்கள் தொகுக்கப்பட வேண்டும். அவ்வாறு தொகுக்கப்படும் பொழுதுதான் தமிழில் எந்தெந்த வகையில் எவ்வளவு கலைச்சொற்கள் இருக்கின்றன என்பதை நம்மால் உணரமுடியும்.

தமிழ் இலக்கியப் பரப்பை உற்றுநோக்குகின்றபோது அரிய பல கலைச்சொற்கள் விரவியிருப்பதை நாம் காணமுடிகின்றது. இக்கலைச்சொற்களைத் தொகுத்துக் காண்பதன் மூலம் கீழ்க்காணும் பயன்பாட்டையும் நெறிமுறையையும் நாம் பெறமுடியும்.

1. **இன்றைய கலைச்சொல்லாக்கத்திற்கு அச்சொற்களைப் பயன்படுத்திக் கொள்வது,**
2. **கலைச்சொல்லாக்கத்திற்கென நெறிமுறைகளை அறிவது.**

பண்டைத் தமிழ்க் கலைச்சொற்களை இப்பொழுது பயன்படுத்திக்கொள்ள நினைக்கும்பொழுது அச்சொற்களின் பொருத்தப்பாட்டையும் பயன்பாட்டு நுட்பத்தையும் முதற்கண் தெரிந்துகொள்ள வேண்டும். நம் முன்னோர்களால் வழங்கப்பட்டு இலக்கியங்களில் பயிலப்பட்டு வந்த பல சொற்கள் இன்று வழக்கொழிந்தும், பொருள் சிதைந்தும், சொல் வடிவம் திரிந்தும் காணப் படுகின்றன. வழக்கொழிந்த சொற்களை ஆளுகைக்குக் கொண்டு வருவது இயன்ற செயலாகலாம்; ஆனால், பொருள் சிதைந்த சொற்களை மீண்டும் முன்னைய பொருளில் வழக்கிற்குக் கொண்டு வருவது இயலாத காரியம் ஆகும். எனவே, சொல் வடிவம் சிதைந்து வழக்கிலுள்ள சொற்களையும், வழக்கிலிருந்து மறைந்த சொற்களையும் இன்றைய பயன்பாட்டிற்குக் கொண்டுவர முடியும்.

## நுட்பப் பயன்பாடு

சொற்களுள், நுட்பங் கருதிச் சுட்டப்படும் சொற்களையே கலைச்சொற்கள் என்று நாம் கூறுகிறோம். துவாரத்தை (hole) குறிக்கத் துளை, தூம்பு, சுரை, புழை, வாயில், இல்லி, பொந்து போன்ற பல சொற்கள் உள்ளன. இவற்றுள் கண்ணுக்குத் தெரிந்த துவாரம், கண்ணுக்குத் தெரியாத துவாரம் என இருநிலைப்படுத்திப் பார்க்கும்பொழுது, மிக நுட்பமாக முன்னையோர் சொற்களைக் கலைச்சொற்களாகப் பயன்படுத்தியுள்ள திறம் போற்றத்தக்கதாக உள்ளது.

**தூம்புடைய வெள்ளெயிறு (சீவக. 1986 : 2956)**
**தூம்புடைத் தடக்கை (புறநா. 1985 : 19)**
**சுருங்கைத் தூம்பின் மனை (மணிமே. 1981 : 28,5)**
**தூம்பகம் பழுநிய தீம்பிழி மாந்தி (பதிற்றுப். 1980: 81, 21)**
**சுரை எயிற்று நாகம் (சீவக. 1986:2970)**
**அகன்சூல் அஞ்சுரைப் பெய்த வல்சியர் (அகநா. 1981 : 113)**

என 'tubilarity' (கண்ணுக்குத் தெரிந்த) உட்டுளையைக் குறிக்க சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ள தன்மையைக் காணமுடிகின்றது. ஆனால், மகளிரின் மார்பகக் காம்பிலுள்ள அறியப்படாத துளையை (orifice, small hole) குறிக்க இல்லி என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ள நுட்பநிலையையும் அறியமுடிகின்றது.

இல்லி தூர்ந்த பொல்லா உறுமுலை (புறநா. 1985: 164)

இதனைப் போன்றே மட்குடத்தின் அறியப்படாத கசிவுத் துளையைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

இல்லிக்குடம் (நன்னூல் 1983: 28)

## அரிய கலைச்சொற்கள்

தமிழிலக்கியங்களில் பயின்று வந்துள்ள பல அரிய கலைச்சொற்கள் இன்று வழக்கொழிந்துள்ளன; அவற்றை மீண்டும் வழக்கில் கொணர்ந்து கலைச்சொல்லாக்கம் சிறப்படையச் செய்ய வேண்டும். இரத்தத்தைக் (blood) குறிக்க இரத்தம், குருதி என்ற சொற்கள் ஆளப்பட்டு வருகின்றன. 'ரத்தம்' என்பது வடசொல் என்ற நிலையில் மொழிமுதலில் இகரம் சேர்க்கப்பட்டு இரத்தம் என்றும் அகரம் சேர்க்கப்பட்டு அரத்தம் என்றும் இலக்கியங்களில் ஆளப்பட்டுள்ளன.

**அரத்தம் உண்டு ஒளிரும் வாளவுணர்'**
**(நைடதம் 1962:14)**

இரத்தம் என்ற சொல்லைக் கொண்டு இன்று பல கலைச்சொற்கள் உருவாக்கப்பட்டு வழக்கில் ஆளப்பட்டு வருகின்றன. இரத்தம் என்பது வடசொல்லாதலால் அதனைக் குருதி எனத் தமிழ்ச் சொல்லால் வழங்கிய நிலையும் காணப்படுகின்றது. இரத்தாட்சகன் என்பதைக் 'குருதிக்கண்ணன்" எனத் தமிழ்ப்படுத்திய நிலையையும் நாம் காணலாம். இச்சொற்களுக்கு மேலும் இரத்தத்தைக் குறிக்க "நெய்த்தோர்" என்ற சொல் இலக்கியங்களில் ஆளப்பட்டு இன்று வழக்கொழிந்துள்ளது.

**நெய்த்தோர் வாய (நற்றிணை 1962: 2)**
**ஐயோடு பித்து நெய்த்தோர் அசும்பு**
**(சீவக. 1986: 2938)**

இந்நெய்த்தோர் என்ற சொல் தெலுங்கில் நெத்துரு என்றும், கன்னடத்தில் நெத்தரு என்றும் வழங்கப்படுவதாக அறியமுடிகிறது. குமரி மாவட்டப் பேச்சுவழக்கில் இன்றும் 'நெத்தரு' என்று இச்சொல் பயிலப்படுகின்றது. தென்னார்க்காடு மாவட்டக் கிராமப்புறத்தில் ஒரு பிரிவு மக்களிடையே இச்சொல் 'நெத்தம்' என்று வழக்கிலுள்ளதையும் காணலாம். பேச்சுவழக்கில் வழங்கப்பட்டு வரும் இச்சொல், ஒருகாலத்தில் பரந்த வழக்கிற்குரிய சொல்லாக இரத்தத்திற்குப் பதிலாக இருந்திருக்க வேண்டும். 'இரத்தம்' என்ற கலைச்சொல் பெருவழக்குடையதாக ஆகிய பிறகு இச்சொல் வழக்கொழிந்து போயிருக்க வேண்டும்.

பெற்றெடுத்தலாகிய ஈனுகையைக் (bringing forth, yield) குறிக்க ஈற்று என்ற சொல் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. தொழிற்பெயராக வந்த இக்கலைச்சொல் இருதிணைப் பொருள் மேலும் சாற்றிக் கூறுவதற்கு முன்பு பயன்பட்டு வந்தது.

**பெண்ணீற்று உற்றென (புறநா. 1985: 82)**
**மானினீனும் ஈற்றினிடை (பிரபோத, 1898: 11.88)**

இப்பொழுது இச்சொல் அஃறிணைப் பொருளின் ஈனுகையை மட்டுமே குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றதேயன்றி உயர்திணைப் பயன்பாட்டில் இச்சொல் பயன்படுத்தப்படவில்லை.

## தமிழ் இலக்கியங்களில் கலைச்சொற்கள்

'இப்பசுவிற்கு எத்தனையாவது ஈற்று', என்று கேட்கும்

வழக்கம் உண்டு; ஆனால் 'இந்தப் பெண்ணிற்கு எத்தனையாவது 'ஈற்று' என்று கேட்கும் வழக்கம் இல்லை; எத்தனையாவது பேறு என்று கேட்கும் வழக்கம்தான் இருந்து வருகின்றது. இவ் ஈற்று என்ற சொல் இன்றும் நாட்டுப்புற வழக்கில், 'ஈத்து' என வழங்கப்படுகின்றது.

வாய்ச்சி 'adze' என்பது செதுக்குவதற்குப் பயன்படும் ஒரு கருவியை உணர்த்தும் சொல்லாகும். இக்கருவி மரத்தையும், செங்கல்லையும் செதுக்குகின்ற ஒரு கருவியாக இருந்தது. இன்று மரவேலை செய்பவரிடத்து மட்டுமே இக்கருவி பயன்பாட்டில் உள்ளது.

**வாய்ச்சியால் இட்டிகை செய்து**
**(சீவக. 1986: 2689)**

என்பதில் செங்கல்லைச் செதுக்குகின்ற கருவியாகவும்,

**வாய்ச்சி வாயுறுத்தி மாந்தர் மயிர்தொறுஞ் செத்தினாலும் (சீவக. 1986:2825)**

என்பதில் மரத்தைச் செதுக்கும் கருவியாகவும் இக் கலைச்சொல் ஆளப்பட்டுள்ளது. வாய்ச்சி என்ற சொல் மரவேலை செய்வோரின் வழக்கில் இன்று 'வாட்ச்சி' என வழங்கப்பட்டு வருகின்றது.

மழைநீரைப் பெறாத மண் சூரிய வெப்பத்தால் சூடேறியிருக்கும். இத்தகைய மண்ணைச் சுடுமண் என்று கூறுவர். இந்தச் சுடுமண்ணை உழவர் குடிமக்கள் வெங்கார்மண் என்று பெயர்ப்படுத்தி வழங்குவர்; இன்றும் வழங்குகின்றனர். வெங்கார் மண் என்னும் இக் கலைச்சொல் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் காலத்திலேயே வழக்கிலிருந்திருக்கின்றது.

**மாரி வெங்கார் மண்ணிலே சொரிய**
**(நச்.சீவக. 1986 : 2503)**

என்ற தொடரிலிருந்து மேற்கருத்தை உணரலாம்.' வெங்கார்' என்ற சொல் யாழ்ப்பாண வழக்காகச் சென்னைப் பல்கலைக்கழக அகராதி கூறுகின்றது. இவ் வெங்கார் என்ற சொல்லிலிருந்து வந்த வெங்காரிப்பு 'cracking of agricultural land by excessive heat' என்ற சொல் இன்றும் வழக்கில் இருந்து வருகின்றது. இதனை நோக்கும் பொழுது இக் கலைச்சொல்லின் பயன்பாட்டு விரிவாக்கத்தை உணரமுடிகின்றது.

மருத்துவத் துறையில் மருந்தாளர் என்ற சொல் இன்று வழக்கில் காணப்படுகின்றது, இச்சொல் மருந்தாளுநர் 'Pharmacist' என்றும் வழங்கப்படுவதைக் காணலாம். இதற்கு 'மருந்து செய்திறம் கற்ற வல்லவர்' என்று பொருள். இப்பொருளைக் கொண்ட மருந்தாளர் என்ற சொல் பெருங்கதையில் இடம் பெற்றுள்ளது. அங்கு இச்சொல் மருந்தாளுநரை மட்டும் குறிக்காமல் மருத்துவரையும் குறித்ததைக் காணமுடிகின்றது.

**மகாஅர் மருந்தாளரின் மறத்தகை அண்ணல்**
**(பெருங்கதை 1935: 2, 4, 175)**

என்பது அத்தொடர். மகாஅர் மருந்தாளர் என்பதற்கு, "குழந்தைகளுக்கென மருந்து ஆய்ந்து கொடுக்கும் மருத்துவர்" எனப்பொருள் விளக்கம் அறிய முடிவதால் இன்றைய குழந்தை மருத்துவரை (Paediatrician) குறிக்கும் கலைச்சொல்லாக அது விளங்கி யிருக்க வேண்டும் என்பதை நாம் உய்த்துணரலாம். இன்றைய மருந்தாளர் என்ற சொல்லாட்சி பழந்தமிழ் இலக்கியக் கலைச்சொல்லாக இருப்பதை எண்ணி நாம் பெருமைப்படாமல் இருக்க முடியாது.

அவற்றைப் போன்று இலக்கியங்களில் பயின்றுவந்த பல சொற்கள் இன்று பயன்பாட்டில் வரவேண்டிய நிலையில் உள்ளன. எடுத்துக்காட்டிற்குச் சிலவற்றைக் காணலாம்.

விலங்கின வகைகளுள் ஊர்ந்துசெல்லும் உயிரினங்களும் ஒருவகையாகும். இதற்கு 'ஊர்வன' 'reptiles' என்ற சொல் இப்பொழுது ஆளப்பட்டு வருகின்றது. கலைச்சொல் கோட்பாட்டில் சுருக்கம் (brevity) என்பது இன்றியமையாததாகக் கருதப்படுகின்றது. இப்பொழுது வழங்கப்பட்டு வரும் ஊர்வன என்ற சொல்லைக் காட்டிலும் மிகச் சுருங்கிய அழகிய வடிவான சொல் இலக்கியத்தில் காணப்படுவதை நோக்கும் பொழுது கலைச் சொல்லாக்கத்திற்குரிய நுட்பக்கூறுகள் அச்சொல்வழி வெளிப்படுவதை உணர முடிகின்றது.

**விலங்கினம் கலைய ஊர்வைகள் மெலிய**
**(முகியத்தீன். 1983 :33)**

என்ற தொடரில் அமைந்துள்ள ஊர்வை என்ற சொல் ஊர்வன என்பதைவிடவும் நேரிய சொற்செட்டுடைய சொல்லாக அமைந்துள்ளதல்லவா ! ஊர்வன என்பதற்கு மாற்றுக் கலைச்சொல்லாக இதனை அமைத்துக் கொள்வதால் தவறேதும் இல்லை.

இதைப்போலவே நீர்வாழ் உயிரினங்களைக் குறிக்கச் சுருங்கிய சொல்லாகத் தமிழில் கலைச்சொல் பயன்படுத்தப்படவில்லை என்றே கூறலாம். இதனைக் குறிப்பதற்கு நீர்வாழ்வன 'aquatic creatures' என்ற சொல்தான் இப்பொழுது பயன்பாட்டில் உள்ளது. இச்சொல்லும் "நீர்வாழ் உயிரினங்கள்" என்ற சொல்லின் சுருங்கிய வடிவமாகவே கருதப்படுகின்றது. இதையும் கலைச்சொல் சுருக்கம் கருதி இன்னும் சுருங்கிய பொருட் பொருத்தமுடைய சொல்லாக நாம் ஆக்கிக்கொள்ள வேண்டும். அவ்வாறு ஆக்கும்பொழுதுதான் எளிமையான கலைச்சொல்லைப் பெறமுடியும். இத்தகையதொரு கலைச்சொல் பட்டினத்தார் பாடலொன்றில் காணப்படுகின்றது.

**நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ**
**(பட்டினத்துப் 1973: 24,2)**

என்ற தொடரில் காணப்படும் நீரி என்ற இரண்டெழுத்துச் சொல் நீர்வாழ் உயிரினங்கள், நீர்வாழ்வன என்பவற்றினின்றும் சுருங்கி நீரி என்று அழகிய கலைச்சொல்லாக உருவெடுத்துள்ளது. இச்சொல் சுருங்கிய வடிவில் விரிந்த பொருளைத் தந்து நிற்கின்றது. இக்கலைச்சொல்லையும் இன்றைய கலைச் சொல்லாக்கத்தார் பயன்பாட்டில் கொண்டுவருதல் வேண்டும்.

சுருங்கிய கலைச்சொல்லாகப் பிறிதொன்றைக் காணலாம். அளத்தல் 'measure' என்ற வினைக்கு அளவு என்றும், அளவை என்றும் பெயர்ச்சொற்கள் உள்ளன. இவை இரண்டும் அளவுக்கூறுகளையும் அளவின் வகைகளையும் எடுத்துக் கூறுவனவாகும்.

ஆனால் அளத்தற்குப் பயன்படும் கருவிகளைக் குறிக்க ஒருசொற் கலைச்சொல் இப்பொழுது பயன்பாட்டில் இல்லை. அளவு கருவி 'instrument of measurement' என்ற சொல்தான் இப்பொழுது உள்ளது. இந்த அளவுக்கருவி என்ற சொல்லின் பொருளை உள்ளடக்கிய அளவி' என்ற சொல் ஒன்று திருக்கோவையாரில் காணப்படுகின்றது.

**அளவியை யார்க்கும் அறிவறியோன்**
**(திருக்கோ 1972:10)**

என்று குறிப்பிடப்படும் இச்சொல்லை அளவுக் கருவி என்பதற்கு மாற்றாகப் பயன்படுத்தலாம். திருக்கோவையாருக்கு உரையெழுதப் புகுந்த பேராசிரியரின் உரைக்கூற்று இச்சொல்லின் பொருளை மேலும் தெளிவுபடுத்துவதாக அமைந்துள்ளது.

துறவு–துறவி என நின்றாற் போல அளவு–அளவி என நின்றது என்பது பேராசிரியரின் உரையாகும்.

இதனுள் துறவு–துறவி என நின்றாற் போல என்பது துறத்தலை உடையவன் துறவி எனவும், துறவைச் செய்பவன் துறவி எனவும் சொல் மாற்றம் பெற்றதைச் சுட்டுகின்றது. இதைப் போன்றே அளத்தலை உடையது அளவி, அளவைச் செய்வது அளவி எனவும் பொருள் விரிவு செய்வதன் மூலம் அளவி என்பது அளவுக் கருவிகளைக் குறிக்கும் அரிய கலைச்சொல் என்பதை நாம் உய்த்துணரலாம்.

## வழக்குத் தகுதிச் சொற்கள்

எந்த ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லும் அச்சொல்லால் குறிக்கப்படும் பொருளுக்குத் தகுதிக்குறைவைத் தரும் நிலை ஏற்படும்பொழுது வழக்குத் தகுதியுடைய புதுச்சொல் உருவாதல் இயற்கை. கலைச் சொல்லும் இதற்கு விதிவிலக்கன்று. இந்த வழக்குத் தகுதிச் சொற்கள் (Euphimistic terms) சமுதாய முக்கியத்துவம் வாய்ந்தனவாக அமையும். இதனை இலக்கணத்தில் இடக்கரடக்கல் என்று கூறுவர்.

சான்றிற்கு ஊமை, குருடு போன்ற சொற்களை எடுத்துக் கொள்வோம். ஊமை 'dump' என்ற சொல், ஊமை, ஊமையர், ஊமையர் பள்ளி என வழக்காறுகளைப் பெற்றிருப்பதைக் காணலாம். இச்சொற்கள் அக் குறைபாடுடையோரை அழைக்கப்பயன்பட்டாலும் நாளடைவில் அவர்களை அச்சொல்லால் அழைப்பது தகுதிக்குறைபாடுடையது என்னும் சமுதாய உணர்வு தோன்றத் தொடங்கியது.

எனவே அச்சொற்களின் தகுதி குறைவைப் போக்கித் தகுதியுடைய சொற்களால் அவர்களை அழைக்க வேண்டுமென்பதால் அச்சொற்களுக்கு மாற்றாக இடக்கரடக்குச் சொற்கள் உருவாயின. ஊமையர் என்பதை வாய் பேசாதார் என்றும் ஊமையர் பள்ளி என்பதை வாய்பேசாதார் பள்ளி என்றும் மாற்றி வழங்குதற்கேற்ற வகையில் சொற்கள் உருவாக்கப்பட்டன.

'வாய் பேசுதல்' என்ற சொல் வழக்கும் இன்றைய நிலையில் அதிகமாகப் பேசுதலைக் குறிக்கப்பயன்படுகின்றது. இதற்கு எதிர்மறையான வாய் பேசாதார் என்பது அதிகம் பேசாதார் என்று பொருள் மயக்கம் தருகின்ற சொல்லாகவுள்ளது. மேலும் தகுதி கருதிய வாய்பேசாதார் என்ற சொல்லும் நாளடைவில் தகுதிக் குறைவுடைய சொல்லாகச் சமுதாயத்தால் உருவாக்கப்படும் நிலை ஏற்படலாம். எனவே ஊமை, ஊமையர் என்பதற்கும் வாய்பேசாதார் என்பதற்கும் மாற்றாக இலக்கியங்களில் சொல் கிடைப்பின் அச்சொல்லைப் பயன்படுத்தக் கருதலாம்.

அவ்வகையில் 'மூங்கை' என்ற சொல் ஊமை என்ற பொருளில் இலக்கியங்களில் ஆளப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

**ஒரு மூங்கைப் பிள்ளை ஊன் (இறையனார் 1976: 1)**
**கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்து**
**(தேவாரம்: 1040, 2)**
**மூங்கையான் (கம்பரா. 1976: 1, 1, 1)**
**மூகைமை (தணிகைப்பு. வீரட்டபுரா, 3)**

போன்ற சொற்கள் காலந்தோறும் அவற்றின் பெருகிய வழக்கைச் சுட்டி நிற்கின்றன. இச்சொல் பண்பு விகுதி பெற்று மூகைமை 'dumbness' எனப் பண்புப் பெயராக நிற்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இலக்கியங்களுள் பெருகிய வழக்கிலிருந்த இச்சொல்லை ஊமை என்ற சொல்லிற்குரிய வழக்குத் தகுதிச் சொல்லாக இடக்கரடக்குச் சொல்லாக) கலைச்சொல்லாக்கத்தார் பயன்படுத்தக் கருதலாம். அவ்வாறு கருதினால்,

மூங்கை, மூங்கையர், மூங்கையர் பள்ளி
என அழகிய சொற்களை நம்மால் பெறமுடியும்.

ஊமை என்பதைப் போன்றே குருடு என்ற சொல்லும் கருத்தில் கொள்ளத்தக்க ஒரு சொல்லாகும். இப்பொருண்மையைக் குறிப்பதற்குக் குருடர், கண்ணிலி, பார்வையிழந்தோர், பார்வையற்றோர் போன்ற சொற்கள் இன்று வழக்கிலிருந்து வருகின்றன. குருடன் என்பதற்குரிய வழக்குத் தகுதிச் சொற்களாகப் பின்னைய இரண்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. சமூக உணர்வு காரணமாகச் சொல் உருவாக்கப்படும் இத்தகைய நிலை முன்பும் இருந்திருக்கின்றது. சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியர் உரையில் குருடர் என்பதற்கு 'கண் கெட்டவர்' (நச்.சீவக. 1986 : 2376) என்ற சொல் வழக்கு பயின்று வருதலைக் கண்டு மேற்கருத்தைத் தெளியலாம்.

குருடர் என்ற பொருண்மையைச் சுட்டுவதற்கு 'சிதடர்' 'சிதடு' என்ற சொற்கள் இலக்கியங்களில் ஆளப்பட்டுள்ளன.

துஞ்சுபுலி இடறிய சிதடன் போல (புறநா. 1985: 73)
சிறப்பில் சிதடும் (புறநா. 1985: 28)

போன்ற தொடர்களை இதற்குச் சான்றுகளாகக் காட்டலாம். எனவே, சிதடர் என்ற இச்சொல்லைக் குருடர் என்ற சொல்லுக்குரிய இடக்கரடக்குச் சொல்லாகப் பயன்படுத்த முயலலாம். அவ்வாறு பயன்படுத்தும்பொழுது சிதடர், சிதடர் பள்ளி, சிதடர் இல்லம் என வழக்காறுகள் தோன்றக் கூடும். எனவே, சொற்கள் காலந்தோறும் உருவாக்கப்படல் வேண்டும்.

பண்டைத் தமிழர்கள் அனைத்து அறிவியல் மற்றும் கலைக்கூறுகளையும் இலக்கணப்படுத்தி வைக்கவில்லை. அவ்வாறு வைக்கப்பட்டவற்றுள் ஒருசில துறைகளைச் சார்ந்த நூல்கள் தவிர ஏனைய துறைகளுக்கு நூல்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

மேலும், அறிவியல் என்ற பிரிவு அப்பொழுது இல்லை; எண், எழுத்து என்ற இருபெரும் பிரிவுகளுக்குள் அது அடங்கியிருந்தது. கற்றற்குரிய கலைகளாக அப்பொழுது கூறப்பட்டவற்றுள் பெரும்பாலான அறிவியல் துறையைச் சார்ந்தவையாக இருந்தாலும் அவற்றையும் கலை என்றே வழங்கி வந்தனர். இவை அனைத்திற்குமுரிய நூல்கள் நமக்குக் கிடைத்தால் அன்றைய அறிவியல் சிந்தனையையும் அச்சிந்தனை யின்பாற்பட்ட கலைச்சொற்களையும் நாம் பெறமுடியும்; இன்றைய கலைச்சொல் தேவைக்கு அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளவும் முடியும்.

கணித அறிவியல் பெரிதும் வளர்ந்த துறையாக அப்பொழுது இருந்தது. அன்றைய கணிதக் கூறுகளை இன்றைய கணிதவியலோடு ஆய்வு செய்யும் ஆர்வம் இன்று வளர்ந்து வருகின்றது. கணக்கதிகாரம், ஆஸ்தானக் கோலாகலம் போன்ற கணித நூல்கள் கணிதவியல் நுட்பங்களைக் கூறுகின்றன. தொல்காப்பிய இலக்கணத்தில் எண்ணுப் பெயர்ப் புணர்ச்சி விதந்து கூறப்படுவதிலிருந்து கணிதத்தின் அன்றைய இன்றியமையாமை புலப்படுவதோடு பலவகை வணிகப் பிரிவுகளில் அக்காலத்தினர் வளர்ந்திருந்த நிலையும் புலப்படுகின்றது. அப்பொழுது நிலவிய கலைச்சொற்களுள் பல ஆழாக்கு, உழக்கு, முந்திரி, வெள்ளம், ஆம்பல், தாமரை போன்றவை இன்று வழக்கொழிந்துள்ளன.

ஆயினும், தொல்காப்பியர் காலத்திலும் அதற்குப் பிற்பட்ட காலங்களிலும் வழங்கிய கணிதவியல் சொற்கள் இன்றும் வழக்கிலுள்ளன.

இன்றைய கணிதத்தில் $10^6$ என்பதை Ten to the pow-

er of six என வழங்குகின்றனர். இதற்கு 10 ஐ 10ஆல் ஆறு முறை பெருக்குதல், பத்தின் 6 அடுக்கு, பத்தின் 6 மடங்கு என்று பொருள் கூறலாம். இன்றைய வகுப்பறைகளில் $10^6$ என்பதற்கு 10 இன் அடுக்கு 6 என்று சொல்லிக் கொடுக்கப்படுகின்றது.

அடுக்கு என்பதற்கு ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்குதல் என்றுதான் பொருள். பெருக்குதல் என்ற பொருள் அச்சொல்லில் தோன்றவில்லை. Ten to the power of six என்பதில் power என்பதற்கு 'the product of a number multiplied by itself a given number of times' (Oxford Dic. 1988: 632) என்றுதான் பொருள்.

எனவே, பெருக்குதல் என்ற பொருளைத் தரக்கூடிய பிறிதொரு பொருத்தமான ஒருசொல் இலக்கியங்களில் பயின்று வரும்பொழுது அதனைக் கணிதவியலார் கலைச்சொல்லாக ஆய்ந்து ஏற்றுக்கொள்ளலாமே.

இலக்கியங்களில் மடி, மடங்கு என்ற சொற்கள் பரவலாக ஆளப்பட்டுள்ளன. இச்சொற்கள் ஒரு பொருளுடையன.

**நான்காம் மடியன்றே (சீவக. 1986:2793)**
**கூற்றினும் மும்மடி கொன்றான் (கம்பரா. 1976:4,57)**
**இருமடங்காக எய்தும் (சூளா. 1962 : 165)**

இவற்றுள் மடி, மடங்கு என்ற சொற்கள் (ஒன்றின்) பெருக்கம் என்ற பொருளைத் தருவன. இருசொற்களுள்ளும் 'மடி' என்ற சொல் மடிதல், திரும்ப வருதல் என்ற நிலையில் முதனிலைத் தொழிற்பெயராக இருப்பதால் $10^6$ என்பதற்கு 10இன் 6 மடி என்று இதனைக் கலைச்சொல்லாகப் பயன்படுத்த முயலலாம்.

இவை போன்று பல சொற்கள் இலக்கியங்களுள் மறைந்து கிடக்கக்கூடும்.

அவையனைத்தையும் ஒருங்கு திரட்டிப் பகுத்து ஆய்ந்து இன்றைய தேவைக்கேற்ப அவற்றைக் கலைச்சொல்லாக ஆக்கிக்கொள்ள வேண்டும். இது ஒரு தனிமனித முயற்சியாக இருக்க முடியாது.

தமிழறிந்தோர், துறைவல்லுநர், கலைச்சொல்லியலார் முதலியோர் கூடியிருந்து ஆய்ந்து வழக்கு நோக்கிச் செய்யப்பட வேண்டிய முயற்சியாகும். இம் முயற்சி வளர்வதாக.

## துணை நூல்கள்


அகநானூறு, 1981, இரண்டாம் பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

இறையனார் அகப்பொருள் , 1976, கழகம், சென்னை.

ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும், 1980, உ.வே.சா. நூல்நிலையப் பதிப்பு, சென்னை.

கம்பராமாயணம், 1976, கம்பன் கழகம், சென்னை.

குழந்தைசாமி, வி.சி., 1973, கலைக்கதிர், மலர் 25, இதழ் 5, கோயம்புத்தூர்.

சிலப்பதிகாரம் மூலமும் அடியார்க்கு நல்லாருரையும், 1985 , த.ப.க.பதிப்பு, தஞ்சாவூர்.

சீவகசிந்தாமணி மூலமும் நச்சினார்க்கினியருரையும், 1986, த.ப.க.பதிப்பு, தஞ்சாவூர்.

சுந்தரம். இராம 1994, "சொல்லும் திறமை தமிழுக்குண்டு" இரண்டாவது உலகத்தமிழாசிரியர் மாநாடு ஆய்வடங்கல், கோலாலம்பூர்.

சூளாமணி, 1962 இரண்டாம் பதிப்பு, உ.வே.சா. நூல்நிலையப் பதிப்பு, சென்னை,

தணிகைப்புராணம், 1960, கச்சியப்ப முனிவர், திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை,

திருஅடிகள், 1960, 'கலைச்சொற்கள், செந்தமிழ்ச் செல்வி, தொகுதி 35, கழகம், சென்னை.

திருக்குறள், 1984, மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

திருக்கோவையார், 1972, ஸ்ரீ காசிமடப் பதிப்பு, திருப்பனந்தாள். திருவாசகம், 1988 சைவசித்தாந்தப் பெருமன்றம், சென்னை 4

நம்பிள்ளை, 1925, ஈடு முப்பதாயிரப்படி முதற்பத்து, நோபில் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி.

நற்றிணை உரையுடன், 1962 , கழகம் , சென்னை.

நன்னூல் மூலமும் சிவஞான முனிவர் திருத்திய உரையும், 1983, மறுபதிப்பு, கழகம், சென்னை.

நாலாயிர திவ்வியப் பிரபந்தம், 1987, மூன்றாம் பதிப்பு, கி.வேங்கடசாமி (பதி). திருவேங்கடத்தான் பெருமன்றம், சென்னை.

நைடதம் மூலமும் உரையும். 1962, கழகப்பதிப்பு, சென்னை.

பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், 1973, கழகப்பதிப்பு, சென்னை.

பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், 1980, உ.வே.சா. நூல்நிலையப் பதிப்பு. சென்னை.

பாரதிதாசன், 1984, மானுடம் போற்று, தூரன் (பதி.), பூம்புகார் பிரசுரம், சென்னை.

பிரபோத சந்திரோதயம் என்னும் மெய்ஞ்ஞான விளக்கம், 1898, திருவேங்கடசாமிகள், மதராசு ரிப்பன் அச்சியந்திரச் சாலை. மதராசு.

புறநானூறு மூலமும் உரையும், 1981, த.ப.க. வெளியீடு, தஞ்சாவூர். பெருங்கதை மூலமும் உரையும், 1953 உ.வே.சா.. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம். சென்னை.

மணிமேகலை மூலமும் உரையும், 1981, உ.வே.சா. நூல்நிலையப் பதிப்பு, சென்னை,

முகியத்தீன் புராணம், 1983, பதிறுத்தீன் புலவர், ஆசியா பதிப்பகம், அதிராம்பட்டினம்.

Aqueil Ahmed, 1984, 'Western Science and technology in non Western cultures', National Seminar on Social relations of scientific and technical changes, Edited by Aqueil Ahmed, M.A. National Institute of Science and Technology and Development Studies, New Delhi.

Marieo Pei, 1956, Language for Everybody, The American Library, New work.

Tamil Lexicon, 1982, i-vi volumes, University of Madras, Madras.

Vijayaraghavan, R., 1993, Development of Tamil as a language of Science and Technology, Ph.D. Thesis submitted to University of Mysore.



நன்றி:
Contribution of Tamil Culture to the Twenty First Century Volume One.
உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்

# தமிழ் அகராதியியல் நாள் விழா 2021

தமிழ்வளர்ச்சித் துறை, தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத் துறை ஆகியவற்றுடன் இணைந்து செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் நடத்திய 2021 – 2022ஆம் ஆண்டிற்கான "தமிழ் அகராதியியல் நாள் விழா" 2021 நவம்பர் 8ஆம் நாள் திங்கட்கிழமை, சென்னை கோட்டூர்புரத்திலுள்ள தமிழ் இணையக் கல்விக்கழகக் கலையரங்கில் நடைபெற்றது.

இவ்விழாவில், தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு. மகேசன் காசிராஜன் இ.ஆ.ப., அவர்கள் பங்கேற்று 2020ஆம் ஆண்டுக்கான தூயதமிழ் ஊடக விருது, நற்றமிழ்ப் பாவலர் விருது, தூயதமிழ்ப் பற்றாளர் விருது, 2020, 2021ஆம் ஆண்டுகளுக்கான தூயதமிழ்ப் பற்றாளர் பரிசுகள், பள்ளி மாணவர்களுக்கு மாநில அளவில் நடைபெற்ற 2020, 2021ஆம் ஆண்டுகளுக்கான கலைச்சொல்லாக்கப் போட்டி, ஓவியப் போட்டிகளுக்கான பரிசுகள் ஆகியவற்றை வழங்கிச் சிறப்பித்தார். விழாவில் தமிழ்வளரச்சித் துறை இயக்குநர் (மு.கூ.பொ.) திரு.செ. சரவணன் இ.ஆ.ப., அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன், தமிழ் வளர்ச்சி இயக்ககத் துணை இயக்குநர் திரு. ம.சி.தியாகராஜன், தமிழ் இணையக் கல்விக்கழக இணை இயக்குநர் திரு. ரெ. கோமகன், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள் மற்றும் மாணவர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

## 1. தூயதமிழ் ஊடக விருது (ரூ.50,000/, தங்கப்பதக்கம், தகுதியுரை)

***அச்சு ஊடகம்*** *– வெல்லும் தூயதமிழ் – (திரு. தமிழமல்லன்)*
***காட்சி ஊடகம்*** *– மக்கள் தொலைக்காட்சி*

## 2. நற்றமிழ்ப் பாவலர் விருது (ரூ.50,000/, தங்கப்பதக்கம், தகுதியுரை)

***மரபுக்கவிதை*** *– திரு. மறத்தமிழ்வேந்தன்*
***புதுக்கவிதை*** *– திரு. சந்திரா மனோகரன்*

## 3. தூயதமிழ்ப் பற்றாளர் விருது (ரூ.20,000/, சான்றிதழ்)

(மாவட்டந்தோறும் ஒருவருக்கு)

| பெயர் (தி/ள்) | | மாவட்டம் |
|---|---|---|
| முனைவர் சு.சதாசிவம் | – | செங்கல்பட்டு |
| முனைவர் சி.முத்துமாலை | – | சென்னை |
| பாண்டலம்புலவர்க.குணசேகரன் | – | கடலூர் |
| த.தங்கமுத்து | – | தருமபுரி |
| முனைவர் ந.அறிவரசன் | – | திண்டுக்கல் |
| உ.கந்தசாமி | – | ஈரோடு |
| இ.நேரு | – | கள்ளக்குறிச்சி |
| பாவலர்மா.வரதராசன் | – | காஞ்சிபுரம் |
| பி.வைஷ்ணா | – | கன்னியாகுமரி |
| பாவலர் ப.எழில்வாணன் | – | கரூர் |
| முனைவர்அ.ஷர்மிளாபானு | – | கோவை |
| கருமலைத்தமிழாழன் (எ) கி.நரேந்திரன் | – | கிருட்டினகிரி |
| வ.வரதராஜன் | – | மதுரை |
| முனைவர் ஞானம் (எ) நா.ஞானசேகரன் | – | மயிலாடுதுறை |
| கோவி. இராசேந்திரன் | – | நாகப்பட்டினம் |
| கௌதமன் நீல்ராசு | – | பெரம்பலூர் |

| | | |
|---|---|---|
| முனைவர் வே.அழகுமுத்து | – | புதுக்கோட்டை |
| கவிஞர்கு.அழகர்சாமி | – | இராமநாதபுரம் |
| த.பழனி, | – | இராணிப்பேட்டை |
| க.ஆஷா | – | சிவகங்கை |
| தனியெழிலன் (எ) சதீஷ் | – | தஞ்சாவூர் |
| தி.இராஜபிரபா | – | தேனி |
| க.கருப்பசாமி | – | தென்காசி |
| சு.கதிர்வேல் | – | திருப்பத்தூர் |
| மே.மு.மணிமாறன் | – | திருவள்ளூர் |
| செ.உதயணன் (எ) எழுஞாயிறு | – | திருவண்ணாமலை |
| இராம.வேல்முருகன் | – | திருவாரூர் |
| பே.இராசேந்திரன் | – | திருநெல்வேலி |
| முனைவர் தி. உமாதேவி | – | தூத்துக்குடி |
| வி.பத்மநாபன் (எ) வே.பதுமனார் | – | வேலூர் |
| செ.அழகுவேல் (எ) அழகர், | – | விழுப்புரம் |
| முத்துவிக்னேஷ்.க | – | விருதுநகர் |
| அ. சிவபெருமான் | – | அரியலூர் |
| இரா. மோகன் குமார் | – | சேலம் |
| தி.வெ. இராசேந்திரன் | – | திருச்சிராப்பள்ளி |
| ச.காவியா | – | திருப்பூர் |

## 4. தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு 2020

(ஒவ்வொருவருக்கும்(ரூ.5,000/, சான்றிதழ்)

செல்வன் ச.திவாகர்
செல்வி கு.கயல்விழி
செல்வி யூ. அஸ்வத் பெனாஷீர்

## தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு 2021

(ஒவ்வொருவருக்கும்(ரூ.5,000/, சான்றிதழ்)

செல்வி த.பிரியதர்ஷினி,
செல்வன் இர.பாலஸ்ரீகரன்,
முனைவர் இரா. தண்டபாணி

## 5. பள்ளி மாணவர்களுக்கான மாநில அளவிலான கலைச்சொல்லாக்கம் (ம) ஓவியப் போட்டி 2020

(முதற்பரிசு ரூ. ரூ.10,000/, இரண்டாம் பரிசு ரூ.5,000/)

செல்வி ர.க.ராஜஸ்ரீ,
செல்வி சா.காவியா
செல்வி உ. வித்திகா வர்சு
செல்வி அ. ஜூலியட் விண்ணரசி

## பள்ளி மாணவர்களுக்கான மாநில அளவிலான கலைச்சொல்லாக்கம் (ம) ஓவியப் போட்டி 2021

(முதற்பரிசு ரூ. ரூ.10,000/, இரண்டாம் பரிசு ரூ.5,000/)

செல்வன் ச. இனிய உதயன்
செல்வி ச.பூர்ணிமா
செல்வன் கு.பா. மணிகண்டன்
செல்வன் பி. சங்கரகிருஷ்ணன்

## தூயதமிழ் ஊடக விருது (ரூ.50,000/, தங்கப்பதக்கம், தகுதியுரை)




## நற்றமிழ்ப் பாவலர் விருது (ரூ.50,000/, தங்கப்பதக்கம், தகுதியுரை)




## தூயதமிழ்ப் பற்றாளர் விருது (ரூ.20,000/, சான்றிதழ்)











## தூயதமிழ்ப் பற்றாளர் விருது (ரூ.20,000/, சான்றிதழ்








## தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு 2020,2021








## பள்ளி மாணவர்களுக்கான மாநில அளவிலான கலைச்சொல்லாக்கம் (ம) ஓவியப் போட்டி 2020,2021









